# திருப்புகழமிர்தம்



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

சாதாரண சித்திரை

உ

முருகா

## நன்றியறிவிப்பு

எம்மையாளுடைய குமர நாயகன் திருவருள் துணைகொண்டு தொடங்கப் பெற்று நடந்துவரும் நமது திருப்புகழமிர்தத் திங்களித ழுக்கு இந்தச் சித்திரை மாத இதழிலிருந்து முப்பத்து ஐந்தாவது ஆண்டு தொடங்குகின்றது. ஒரு பத்திரிகையைத் தொடர்ந்து பல ஆண்டுகளாக நடத்தி வருவது மிகவும் சிரமமான வேலை என்பதைப் பத்திரிகை உலகில் உள்ளோர் அறிவர். பல வேலைகளிடையே விடாது தொடர்ந்து நடத்தி வருவது அன்பர்கள் பலர் நலமடையும் பொருட்டே. இந்தத் தொண்டுக்குச் சென்ற ஆண்டிலும் பல ஆண்டு களாகவும் கைம்மாறு கருதாது சந்தாதாரர்கள் பலரைச் சேர்த்து உதவிவரும் மெய்யன்பர்கள் பலருக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். அருள்நெறி பரவத் துணையும் அன்பர்கள் அனைவருக்கும் அறுமுகவன் திருவருள் என்றும் நின்று துணை புரிவதாக.

அன்பன்
கிருபானந்தவாரி

---

திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா

| | | |
|---|---|---|
| இந்தியா, இலங்கை | ... | ரூ. 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ. 5-00 |

---

உ

ஓம் குஹாய நம :






# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"



| மலர் 35 | சாதாரண ஹு—சித்திரை மீ<br>ஏப்ரல் 1970 | இதழ் 1 |
|---|---|---|

## திருப்புகழ்

### திருவருணை

கமலமுகப் பிறைநுதல்பொற் சிலையெனவச் சிரகணைநற்
கயலெனபொற் சுழலும்விழிக் குழல்கார்போல்
கதிர்தரளொப் பியதசனக் கமுகுகளப் புயகழைபொற்
கரகமலத் துகிர்விரலிற் கிளிசேருங்

குமரிதனத் திதலைமலைக் கிசலியிணைக் கலசமெனக்
குவிமுலைசற் றசையமணிக் கலனுடைக்
கொடியிடைபட் டுடைநடைபொற் சரணமயிற் கெமனமெனக்
குனகிபொருட் பறிபவருக் குறவாமோ

திமிலையுடுக் குடன்முரசுப் பறைதிமிதித் திமிதிமெனட்
டிமிடிமிடிட் டிகுர்திமிதித் தொலிதாளம்
செககணசெக்கணகதறத்திடுதிடெனக்கொடுமுடியெட்
டிகைசிலைபட் டுவரிபடச் சிலைகோடித்

துமிலவுடற் றசுரர்முடிப் பொடிபடரத் தமுள்பெருகத்
தொகுதசைதொட் டலகையுணத் தொடும்வேலா
துவனிதினைப் புனமருவிக் குறமகளைக் களவுமயற்
சுகமொடணைத் தருணகிரிப் பெருமாளே.

## பதவுரை

திமிலே = திமிலே, உடுக்கு = உடுக்கை, முரசு பறை = முரசு, என்ற வாத்தியங்கள், திமிதித் திமிதிம் என = திமிதித் திமிதிம் எனவும், டிமி டிமிடிட் டிகுர் திமிதித்த ஒலி தாளம் = டிமிடிமிடிட் டிகுர் திமிதித்த எனவும் ஒலி செய்கின்ற தாளம், செககண செக்கண கதற = செககண செக்கண என்று முழங்க, எண் திசைசிலே = எட்டுத் திசைகளில் உள்ள மலேகளின், கொடுமுடி = சிகரங்கள், திடுதிடு என பட்டு = திடுதிடு என்று அழிபடவும், உவரி பட = கடல்கலங்கவும், சிலே கோடி = வில்லே வளேத்து, துமில உடற்று = பேராரவாரத்துடன் போர்புரிந்த, அசுரர் முடி பொடிபட = அசுரர்களின் முடிகள் தூளாகவும், ரத்தம் உள் பெருக = உதிரம் உள்ளே பெருகவும், தொகுதசை தொட்டு அலகை உண = குவிந்துள்ள தசைகளேத் தொட்டுப் பேய்கள் உண்ணவும், தொடும் வேலா = செலுத்திய வேலாயுதரே! துவனி = பறவைகளின் ஒலி நிறைந்த, தினேபுனம் மருவி = தினேப்புனத்துக்குச் சென்று, குற மகளே = குறவர் குலக் குமரியாகிய வள்ளி நாயகியை, களவு மயல் சுகமொடு அணேத்த = களவியல் முறையில் மோக இன்பத்துடன் அணேத்த, அருணகிரி = திருவண்ணுமலேயில் வீற்றிருக்கும், பெருமாளே = பெருமையில் மிகுந்தவரே! கமல முகம் = தாமரை போன்ற முகம்; பிறை நுதல் = பிறைச் சந்திரனேப் போன்ற நெற்றி, பொன் சிலே என = அழகிய வில்லேப்போன்ற புருவம்; வச்சிரகணே = மிகவும் உறுதியான கணேயும், நல் கயல் என = நல்ல மீனும் போன்ற வாய், பொன் சுழ்லும் விழி = அழகாய் சுழல்கின்ற கண்கள்; குழல் கார் போல் = கூந்தல் மேகத்தை ஒக்கும்; கதிர் தரளம் ஒப்பிய தசனம் = ஒளி மிகுந்த முத்தை நிகர்க்கும் பல்; கமுகு களம் = பாக்கினேயொத்த கழுத்து, புயம் கழை = தோள் மூங்கிலே யொக்கும், கமல பொன் கரத்து விரலின் உகிர் = தாமரை போன்ற அழகிய கரத்தின் விரலின் நகம், கிளி சேரும் = கிளியின் மூக்கை யொக்கும், குமரி திதலே தனம் = பருவப் பெண்ணின் தேமல் பரந்த கொங்கையானது, மலேக்கு இசலி = மலேயுடன் மாறுபட்டு, இணே கலசம் என = இரு குடங்கள் போல் விளங்க; குவி முலே சற்று அசைய = குவிந்துள்ள அக்கொங்கைகள் சிறிது அசைய, மணி கலன் ஆட = இரத்தின ஆபரணங்கள் அசைந்தாட, கொடி இடை பட்டு உடை = கொடி போன்ற இடையில் பட்டாடை, பொன் சரண நடை = அழகிய பாதங்களின் நடை, மயில் கெமனம் என = மயில் செல்வதுபோல் விளங்க, குனகி = கொஞ்சிப் பேசி, பொருள் பறிப்பவருக்கு உறவு ஆமோ = பணத்தைப் பறிக்கும் பொது மாதர்களின் கூட்டுறவு ஆமோ? (ஆகாது)

## பொழிப்புரை

திமிலே, உடுக்கை, முரசு என்ற இந்த வாத்தியங்கள், திமிதித் திமிதிம் எனவும் டிமிடி மிடிட் டிகுர்திமி தித்த எனவும்

தாள ஒலியுடன் செககண செக்கண என்று முழங்கவும், எண் திசைகளில் உள்ள குல மலைகளின் சிகரங்கள் திடுதிடு என்று சிதறியழியவும். கடல் கலங்கவும், வில்லை வளைத்து, பெரிய ஆரவாரத்துடன் போர் புரிந்த அசுரர்களின் முடிகள் பொடி படவும் உதிர வெள்ளம் எங்கும் பெருகவும், குவிந்துள்ள தசை களைப் பேய்கள் உண்டு மகிழுமாறும் வேலாயுதத்தைச் செலுத் திய வீர மூர்த்தியே! பறவைகள் ஒலி செய்கின்ற தினைப்புனத் தில் வள்ளி பிராட்டியை களவு முறையில் அன்புடன் இன்பம் பெருகத் தழுவியவரே! திருவருணையில் எழுந்தருளியுள்ள பெருமிதம் உடையவரே! தாமரை போன்ற முகமும், பிறைமதி போன்ற நெற்றியும், அழகிய வில்லைப் போன்ற புருவமும், வச் சிரக் கணையையும் நல்ல மீனையும் ஒத்துச் கழல்கின்ற கண்களை யும் மேகம் போன்ற கூந்தலையும், ஒளிமிக்க முத்து போன்ற பல்லையும், பாக்கு போன்ற கழுத்தையும், மூங்கில் போன்ற தோள்களையும், தாமரையன்ன அழகிய கைகளின் விரல்களில் கிளி மூக்கு போன்ற நகங்களும், பருவத்தின் சிறப்பால் தேமல் பரந்த தனங்கள் மலையுடன் போட்டி போட்டு, இரு குடம்போல் அசையவும், அத்தனங்களின் மீது இரத்தின ஆபரணங்கள் ஆடவும், கொடி போன்ற இடையும், இடையில் பட்டு உடை யும், மயில் போன்ற பாத நடையும் உடையவர்களாய்க் கொஞ் சிப் பேசிப் பொருள் பறிக்கும் விலைமாதர்களின் உறவு ஆகுமோ? (ஆகாது)

## விரிவுரை

இத்திருப்புகழின் முதல் 4 அடிகள் பொது மாதருடைய உடலின் உறுப்புக்களின் சிறப்பைப் பற்றிக் கூறுகின்றன.

**குனகி :—**

குனகுதல்—கொஞ்சிப் பேசுதல்.

பொது மாதர்கள் குழந்தையைப்போல் கொஞ்சிப் பேசிப் பொருள் பறிப்பார்கள்.

இனி அடுத்துள்ள 5, 6, 7, என்ற அடிகள் போர்க்களத் தின் வர்ணனை.

**துவனி :—**

துவனி—பறவைக் கூட்டத்தின் ஒலி.

**களவுமயற் சுகமொடணைத்த :—**

மணம் கற்பு களவு என இருவகைப்படும்: தெய்வயானை யம்மையின் திருமணம் கற்பு மணம். வள்ளியம்மையின் திரு மணம் களவு மணம். இந்த இருமணங்களின் தன்மைகளை

ஆன்மாக்களுக்கு உணர்த்தியதே முருகன் இருமணஞ் செய்து கொண்ட திருவிளையாடல் எனவுணர்க.

### கருத்துரை

அருணை மேவும் அண்ணலே! பொது மாதர் உறவு கூடாது

## திருப்புகழ்

கமல மொட்டைக் கட்ட ழித்துக் குமிழியை
நிலைகு லைத்துப் பொற்கு டத்தைத் தமனிய
கலச வர்க்கத் தைத்த கர்த்துக் குலையற இளநீரைக்

கறுவி வட்டைப் பிற்று ரத்திப் பொருதப
சயம்வி ளைத்துச் செப்ப டித்துக் குலவிய
கரிம ருப்பைப் புக்கொடித்துத்திறல்மதி னபிஷேகம்

அமலர் நெற்றிக் கட்ட ழற்குட் பொடிசெய்து
அதிக சக்ரப் புட்ப றக்கக் கொடுமையி
னடல்ப டைத்துச் சப்ப டுத்திச் சபதமொ டிருதாளம்

அறைதல் கற்பித் துப்பொ ருப்பைப் பரவிய
சிறக றுப்பித் துக்க திர்த்துப் புடைபடு
மபிந வச்சித் ரத்த னத்துத் திருடிக ளுறவாமோ

தமர மிக்குத் திக்க திர்க்கப் பலபறை
தொகுதொ குக்குத் தொத்தொ குக்குத் தொகுதொகு
தரிகி டத்தத் தத்த ரிக்கத் தரிகிட எனவோதிச்

சவடு றப்பக் கப்ப ழொத்திப் புகையெழ
விழிக ளுட்செக் கச்சி வத்துக் குறளிகள்
தசைகள் பட்சித் துக்க ளித்துக் கழுதொடு கழுகாட

அமலை யுற்றுக் கொக்க ரித்துப் படுகள
அசுர ரத்தத் திற்கு ளித்துத் திமியென
அடிந டித்திட் டிட்டி டித்துப் பொருதிடு மயிலோனே

அழகு மிக்கச் சித்ர பச்சைப் புரவியி
னுலவு மெய்ப்ரத் யக்ஷ நற்சற் குருபர
அருணை யிற்சித் தித்தெ னக்குத் தெளிவருள்
பெருமாளே.

## பதவுரை

தமரம் மிக்கு திக்கு அதிர்க்க=ஒலி மிகுந்து திசைகள் அதிர்ச்சியுற, பல பறை=பலவகையான பறைகள், தொகு தொகுக்குத் தொத் தொகுக்குத் தொகு தொகு தரிகி டத்தத் தத்தரிக்கத் தரிகிட என ஓதி=தொகு தொகுக்குத் தொத் தொகுக்குத் தொகு தொகு தரிகிடத்தத் தத்தரிக்கத் தரிகிட என்ற ஒலியுடன் முழங்க, சவடு உற=அழுத்தம் உண்டாகும்படி, பக்கபழு ஒத்தி=பக்கவிலா எலும்புகளைத் தாக்கி, புகை எழ=புகை எழுமாறு, விழிகள் உள் செக்க சிவந்து=கண்களின் உள்ளே மிகவும் சிவந்து, குறளிகள்=மாய வித்தை செய்யும் பேய்கள், தசைகள் பட்சித்து களித்து=மாமிசங்களை யுண்டு களிப்படையவும், கழுதொடு கழுகு ஆட=பேய்களுடன் கழுகுகள் ஆடவும், அமலை உற்று=ஆரவாரம் மிகுந்து, கொக்கரித்து=கொக்கரித்தும், படுகள அசுரர் ரத்தத்தில் குளித்து=பலர் மாண்டுபோன போர்க்களத்தில் அசுரர்களின் உதிரத்தில் குளித்து, திமி என அடி நடித்திட்டு=திமி என்ற ஒலியுடன் பாதங்களை வைத்து நடித்து, இட்டு இடித்து=மேற் சென்று இடித்து, பொருதிடும் மயிலோனே=போர்புரிந்த மயில்வாகனரே; அழகு மிக்க=அழகுமிகுந்த, சித்ர=அலங்காரமான, பச்சை புரவியில் உலவும்=பச்சைக் குதிரையாம் மயிலின் மீது ஏறி உலாவுகின்ற, மெய் ப்ரத்யட்ச=உண்மை வெளிப்படையாக வந்த, நல்சற் குருபர=நல்ல சற்குருபரனே! அருணையில் சித்தித்து=திருவண்ணுமலையில் அடியேன் சித்தி பெறுமாறு, எனக்கு தெளிவு அருள்=அடியேனுக்கு அறிவுத் தெளிவை அருள்புரிந்த, பெருமாளே=பெருமையில் மிகுந்தவரே! கமல மொட்டை=தாமரையின் மொட்டை, கட்டு அழித்து=கட்டு அவிழ்த்து அழகை யிழக்கச் செய்தும், குமிழியை நிலைகுலைத்து=நீர்க் குமிழியை நிலைகுலைந்து உருவிழக்கச் செய்தும், பொன் குடத்தை=தங்கக் குடத்தையும், தமனிய கலச வர்க்கத்தை தகர்த்து=பொன்னுலாய கலசக் கூட்டங்களையும் நொறுங்கச் செய்தும், குலைஅற இளநீரை கறுவி=குலைகுலையாக உள்ள இளநீரைச் சீறியும், வட்டையின் துரத்தி=சொக்கட்டான் காய்களை புறங்காணத் துரத்தி, பொருது அபசயம் விளைத்து=போர் செய்து தோல்வியுறச் செய்தும், செப்பு அடித்து=செப்புச் சிமிழை நொறுக்கியும், குலவிய கரி மருப்பை=விளங்கிய யானையின் கொம்பை, புக்கு ஒடித்து=போய் ஒடித்தும், திறல் மதன அபிஷேகம்=வலிமை மிக்க மன்மதனுடைய மகுடத்தை, அமலர் நெற்றி கண் தழற்கு உள் பொடி செய்து=சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணின் நெருப்பில் பொடிபடுத்தியும், அதிகம் சக்ர புள் பறக்க=அதிக தூரத்தில் சக்கிரவாகப் பறவை பறந்து போம்படி, கொடுமையின் அடல்படுத்தி=கொடுமையான வலிமை கொண்டு அதை அச்சப்படுத்தியும், சபதமொடு இருதாளம்

**அறைதல் கற்பித்து=ஒலியுடனே இரு தாளங்களும் ஒன்றேடொன்று அறைந்து மோதிக்கொள்ளும்படிச் செய்தும், பொருப்பை=மலையை, பரவிய சிறகு அறுப்பித்து=பரந்த இறகுகளை அறுபடும்படிச் செய்தும், கதிர்த்து புடைபடும்=வளர்ச்சியுற்றுப் பக்கத்திடம் யாவும் பரவி, அபிநவ சித்ர=புதுமையும் அழகும் படைத்த, தனத்து= கொங்கைகளையுடைய, திருடிகள் உறவு ஆமோ= திருடிகளாம் பொது மாதர்களின் உறவு ஆமோ? (ஆகாது)**

## பொழிப்புரை

ஒலி மிகுந்து திசைகள் அதிர்ச்சியடையப் பலவகையான பறை வாத்தியங்கள் தொகுதொ குக்குத் தொத்தொ குக்குத் தொகுதொகு தரிகி டத்தத் தத் தரிக்கத் தரிகிட என்ற ஒலியுடன் முழங்கவும், பக்கத்துப் பழு எலும்பு நெரிய முடக்கிய கைகளை ஒத்தித் துணங்கைக் கூத்தாடி புகை எழவும், கண்கள் உள்ளே மிகச் சிவந்து குறளிப் பேய்கள் மாமிசங்களை உண்டு களிப்படையவும், பேய்களுடன் கழுகுகள் ஆடவும், ஆரவாரத்துடன் கொக்கரித்தும், பலர் மாண்ட போர்க்களத்தில் அசுரர்களின் உதிரக் குளத்தில் குளித்துத் திமி என்னும் ஒலியுடன் பாதங்களை வைத்து நன்கு நடனம் புரிந்து, போர் புரிந்த மயில் வாகனரே! அலங்காரத்துடன் அழகிய பச்சை மயிலின்மீது ஏறி உலாவுகின்ற உண்மை தோன்ற வந்த நல்ல சற்குருபர மூர்த்தியே! திருவண்ணாமலையில் சித்திபெற அடியேனுக்கு அறிவுத் தெளிவையருளிய பெருமிதம் உடையவரே! தாமரையின் மொட்டைக் கட்டவிழ்த்து அழகையிழக்கச் செய்தும், நீர்க்குமிழியை நிலை குலைந்து உருவிழக்கச் செய்தும், தங்கக் குடத்தையும், பொன் கலசக் கூட்டங்களையும் நொறுங்கச் செய்தும், குலை குலையாகவுள்ள இளநீரைக் கோபித்தும், சூதாடு கருவியைப் பின்னாலே துரத்திச் சண்டை செய்து தோல்வி வரும்படிச் செய்தும், செப்புச் சிமிழை அடித்து நொறுக்கியும், விளங்குகின்ற யானையின் கொம்பைப் போய் ஒடித்தும், வலிமை மிக்க மன்மதனுடையமகுடத்தைச் சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணெருப்பால் பொடிபடச் செய்தும், சக்கரவாகப் பறவை நெடுந்தொலையில் பறந்துபோம்படி, கடும் வலிமையால் அதைப் பயப்படுமாறு செய்தும், இரு நாளங்கள் ஒலி செய்து ஒன்றேடொன்று மோதிக் கொள்ளுமாறு செய்தும், மலைகளின் விரிந்த சிறகுகளை அறுபடும்படிச் செய்தும், வளர்ச்சியுற்று பக்கமெல்லாம் பரவிப் புதுமையும் அழகுங்கொண்ட கொங்கைகளையுடைய பொது மாதர்களின் நட்பு நல்லதா? (அது நல்லதன்று)

## விரிவுரை

இந்தத் திருப்புகழ் மாதர்களின் தனவர்ணனைப் பாடல்.

தாமரை மொட்டு, நீர்க்குமிழி, பொற்குடம், தங்கக் கலசம், இளநீர், சூதாடுங் கருவி, செப்புச் சிமிழ், கரியின் கொம்பு, மன்ம

தன் முடி, சக்ரவாகப் புள், தாளம், மலை என்ற இவைகளைக் கொங்கைகள் வெல்லுகின்றன என்பதை முதல் நான்கு அடிகள் விளக்குகின்றன.

இதில் தற்குறிப்பேற்றம் என்ற அணியைக் காணலாம். தாமரையின் மொட்டு தானே மலர்வதை, தனங்களைக் கண்டு மலர்வது போலவும், நீர்க் குமிழி தானே உடைவதை தனத்துக்கு அஞ்சி உடைவதாகவும், சூதாட்டத்தில் சூதுக் கருவி ஆட்டத்தில் தோற்பதையும் யானையின் கொம்பை கண்ணன் ஒடித்ததையும், மன்மதன் சிவபிரான் கனற்கண்ணால் எரித்ததையும், சக்கரவாகப் புள் நெடுந்தொலைவில் பறப்பதையும், இந்திரன் மலைகளின் சிறகையரிந்ததையும் தாளம் ஒன்றுடன் ஒன்று தட்டுவதையும், தற்குறிப்பேற்றமாக அடிகளார் கூறுந் திறம் மிகமிக வியத்தற்கு உரியது.

**தமரமிக்கு...பொருதிடு:—**

இந்த மூன்று அடிகள் போர்க்களத் திறத்தையும் மயிலின் சிறப்பையுங் கூறுகின்றன.

**சவடுறப் பக்கப் பழொத்தி :—**

இது துணங்கைக் கூத்தைக் குறிப்பிடுகின்றது.

"முடக்கிய இருகை பழுப்புடை யொற்றித்
தொடக்கிய நடையது துணங்கையாகும்" —பிங்கலநிகண்டு.

**மெய்ப்ரத்யட்ச நற்குருபர :—**

உண்மையாக கட்புலன் காண வெளிப்பட்டுத் தோன்றியருள் புரிகின்ற தெய்வம் முருகன்.

"ஒழியாத புவனத் துயிர்க்குயிரதாய் நிற்ப
தொருதெய்வ முண்டென எடுத்
துரையாலுணர்த்துவதை யொழியவெவ ரெவர்கட்கும்
ஊன்கண் உளக்கண்ணதாம்
விழியாக முன்னின்று தண்ணளி சுரந்தவர்கள்
வேண்டிய வரங் கொடுப்பான்
மெய்கண்ட தெய்வமித் தெய்வ மல்லால் புவியில்
வேறில்லை யென் றுணர்தியால்" —குமரகுருபரர்

**அருணையிற் சித்தித் தெனக்குத் தெளிவரும் :—**

இது அருணகிரியாரின் வரலாற்றுப் பகுதி.

## கருத்துரை

அருணையண்ணலே விலை மாதர் உறவு கூடாது.

# கற்பு

## தெய்வ சகாயம்

அன்னம்மாள் தன் புதல்வி பொன்னம்மாவைப் பார்த்துப் புகலு கின்றாள்:

"மகளே! நீ எழுந்தவுடன் முருகன் படத்துக்கு முன் போய் வணங்கு. தெய்வந்தான் நமக்குத் துணை.

"விழிக்குத் துணைதிரு மென்மலர்ப்
பாதங்கள்; மெய்ம்மை குன்றா
மொழிக்குத் துணை முருகாஎனும்
நாமங்கள்; முன்பு செய்த
பழிக்குத்துணை யவன் பன்னிரு
தோளும்; பயந்த தனி
வழிக்குத்துணை வடி வேலும்செங்
கோடன் மயூரமுமே"

என்கின்றார் அருணகிரிநாதர். ஆகவே தெய்வத்தைத் துணையாகக் கொண்டவர்க்கு எப்போதும் ஒரு குறையும் வராது. இதனை விளக்கு வதற்கு ஒரு கதை சொல்லுகின்றேன் கேள்.

பல்லவபுரம் என்ற நகரத்தை பராந்தகன் என்ற அரசன் அரசு புரிந்து வந்தான். அவன் தோள் வலியாலும் வாள் வலியாலும் மிகுந்தவன்.

அந்த அரசனுடைய அரண்மனையில் இரு வேலையாட்கள் இருந் தார்கள். ஒருவன் பேர் செல்லப்பன்; மற்றொருவன் பேர் மல்லப்பன். செல்லப்பன் எப்போதும் தெய்வ சகாயம்; தெய்வ சகாயம் என்று கூறிக்கொண்டிருப்பான். அரசனிடம் ஏதாவது ஒன்றைக் கொணர்ந்து தருகின்றபோது தெய்வ சகாயம் என்று கூறுவான். இருந்தாலும், நின்றாலும், சென்றாலும் தெய்வ சகாயம் என்று இனிது கூறுவான்.

மல்லப்பன் இதற்கு நேர்மாறாக ராஜ சகாயம் என்று கூறுவான். அரசன் தண்ணீர் கேட்டால், மல்லப்பன் தண்ணீரைக் கொணர்ந்து தரும்போது ராஜ சகாயம் என்று கூறுவான். அரசன் அவனை அழைக் கும் போதெல்லாம் ராஜ சகாயம் என்று கூறிக்கொண்டு வருவான். அரசன் இந்த இருவருடைய சொற்களையும் செயல்களையும் உற்று நோக்கினான். செல்லப்பன் தெய்வ சகாயம் என்கின்றான். மல்லப்பன் ராஜ சகாயம் என்கின்றான். இந்த இருவரையும் சோதிக்க வேண்டும் என்று எண்ணினான்.

மந்திரியை அழைத்தார். "மதிமிகும் அமைச்சரே! நம்மிடம் உறையும் இந்த பணியாளர்களில் செல்லப்பன் எப்போதும் "தெய்வ சகாயம் தெய்வசகாயம்" என்கின்ருன். மல்லப்பன் எந்த நேரத்திலும் ராஜ சகாயம் ராஜ சகாயம் என்றே கூறுகின்ருன். இவர்களை நீ தக்கபடி சோதித்து உண்மையை உணர்ந்து எனக்கு உரைப்பாயாக" என்ருன்.

மந்திரி தனிமையில் அந்த இருவரையும் அழைத்தான். "செல்லப்பா! நீ தெய்வ சகாயம் என்கின்ருயே? உன் கருத்து என்ன?" என்று வினவினுன்.

செல்லப்பன், "அமைச்சரே! எல்லாச் செடி கொடிகளும் பூத்த பின் காய்க்கின்றன. ஆனுல் பூசினி மட்டும் காய்த்த பின் பூக்கின்றது. பூசினி எதிர்நீச்சல் போடுவதுபோல், காய் முன்னே; பூ பின்னே. எலுமிச்சம் பழம் நுழைகின்ற அளவில் வாய் வைத்து ஒரு பெரிய பானையைச் செய்து, பூசினிக் கொடியிடம் வைத்து அந்தச் சிறிய வாயில் நெல்லிக்காய் அளவுள்ள காயுடன் கூடிய கொடியை நுழைத்து வைத்துவிட வேண்டும். பானைக்குள் சென்ற பிஞ்சு நாள் செல்லச் செல்ல அந்தப் பானை எத்துணை பெரிதோ அத்துணைப் பெரிய பழமாகிவிடும். பானையும் உடையாமல், பூசினிப் பழமும் உடையாமல் பழத்தை வெளியே எடுக்க முடியுமா? ஒருபோதும் முடியாது. ஒன்று பழத்தைத் துண்டுபோட்டு எடுக்க வேண்டும், அல்லது பானையை உடைத்துப் பழத்தை முழுமையாக எடுக்கவேண்டும். இதுதானே மனிதனுலே செய்ய முடியும். நாம் ஒவ்வொருவரும் அன்னையின் கருவிலே அறுகு நுனி பனியனைய சிறிய துளி விந்துவாகச் சென்ருேம். 10 மாதங்கட்குப் பின் ஒரு முழம் உள்ள பருத்த குழந்தையாகப் பிறந்தோம். தாய்க்கும் சேதமில்லை. சேய்க்கும் சேதமில்லை. இப்படி கருவுற்ற நாள் தொடங்கி நம்மைக் காத்தளிப்பது தெய்வம் அல்லவா? குழந்தை பிறந்தவுடனே தாயிடம் பால் பெருக வைப்பது தெய்வம் அல்லவா? ஒவ்வொரு மூச்சும் ஒவ்வொரு பேச்சும் தெய்வ சகாயமில்லாமல் நடைபெறுமா? எனவே ஆழாழி கரையின்றி நிற்பதும், அனைத்துலகில் உள்ள ஆருயிர்கள் எல்லாம் வாழ்வதும் தெய்வ சகாயம். தெய்வ சகாயம் இன்றி நாம் ஒரு கணம் வாழமுடியுமா? ஆதலால் தோன்ருத் துணையாக நமக்கு உதவி புரிகின்ற, உயிர்க்குயிராகிய தெய்வந்தான் நமக்குத் துணை. அதனுல் தெய்வ சகாயம் என்கின்றேன்" என்ருன்.

இதனைக் கேட்ட மந்திரி மகிழ்ச்சியுற்ருன். அடுத்து மல்லப்பனை அழைத்து "அப்பா! மல்லப்பா! நீ ராஜ சகாயம் என்கிருயே! உன் கருத்து என்ன?" என்று கேட்டான்.

மல்லப்பன் "அமைச்சர் பெருமானே? கடவுள் கண்ணுக்குத் தெரிகின்றதா? இல்லை. கண்ணுக்குத் தெரியாத கடவுளை நம்பி தெய்வ

2

சகாயம் என்பது பேதைமை. நமக்கு உணவு தந்து, உடை தந்து, பொருள் தந்து உதவுகின்றவர் அரசர் பெருமான். ஆதலால் கண் கண்ட தெய்வம் அரசர். அதனால் நான் ராஜ சகாயம் என்கின்றேன். கண்ணுக்குத் தெரியக் கருணை புரிகின்ற மன்னனை விடுத்து, ஏதோ மூடநம்பிக்கையுடன் தெய்வ சகாயம் என்று கூறுவதை நான் விரும்ப வில்லை. ஆதலால் தெய்வ சகாயம் என்று கூறுவது பித்தலாட்டம். ராஜ சகாயம் என்பதுதான் சரி'' என்று விரிவாக விளம்பினான். இந்த இருவருடைய உரைகளையும் அமைச்சன் கேட்டான். சிறிது நேரம் சிந்தித்தான்.

செல்லப்பனையும் மல்லப்பனையும் பார்த்து நீங்கள் இருவரும் 40 நாட்கள் இந்த நகரையும் நாட்டையும்விட்டு வெளியேறி வசிக்கவேண் டும். நாற்பதுநாள் செலவுக்கு நாற்பது ரூபாய் தருகின்றேன். இதனைப் பெற்று, இங்கே இனி ஒரு விநாடிகூடத் தாமதியாமல் புறப்பட்டுப் போங்கள். நாற்பது நாட்கள் கழித்து வாருங்கள்'' என்று கட்டளை யிட்டான்.

செல்லப்பனும் மல்லப்பனும் நாற்பது வெண் பொற்காசுகளை வாங்கிக்கொண்டு கிளம்பினார்கள். செல்லப்பன் சிரித்த முகத்துடன் தெய்வ சகாயம் என்று கூறிவிட்டுப் புறப்பட்டான்.

வாடிய முகத்துடன் ராஜ சகாயம் என்று கூறிவிட்டு மல்லப்பன் புறப்பட்டான்.

செல்லப்பன் அந்த நாட்டைவிட்டுச் சென்றான். வழியில் ஒரு வரசித்தி விநாயகர் கோயில். அன்று சதுர்த்தி. நிரம்பப் பால் வாங்கிப் பிள்ளையாருடைய திருமேனி குளிர அபிஷேகஞ் செய்தான். மிகுதியுள்ள ரூபாய்க்கு அரிசி வாங்கி சர்க்கரைப் பொங்கல் செய்து பிள்ளையாருக்கு நிவேதனஞ் செய்தான். அங்குள்ள ஏழை எளியவர் களுக்கு வழங்கினான். அந்த வறியவர்கள் சர்க்கரைப் பொங்கலை வயிறார உண்டு, செல்லப்பனை வாயார வாழ்த்தினார்கள்.

அங்கிருந்து புறப்பட்டான். "எங்கும் தெய்வம் இருக்கின்றார். அங்கும் இங்கும் எங்கும் உள்ள தெய்வம் என்னைக் காக்கும். கல்லுக் குள் உள்ள தேரைக்கும், கருவுக்குள் உறையும் உயிருக்கும், முட்டைக் குள் உள்ள குஞ்சுக்கும் உணவு தருகின்ற தெய்வம் நம்மைக் காக்கா மல் கைவிடுமா? காப்பது அவன் கடமை. அவரை நினைப்பது என் கடமை; என் உயிர் உடைமை யாவும் கடவுளின் உடைமை; கடவு ளின் கருணையைக் கருதாதிருப்பது மடமை. "தெய்வ சகாயம்'' என்று கூறிக்கொண்டே கால்போன வழியில் நடந்து ஒரு ஏரிக்கரை வழியே சென்றான். விசாலமான ஏரி. ஏரிக்கரையில் ஒரு குதிரை வண்டி யில் வயது ஐந்து உள்ள ஒரு அரச குமாரனை ஏற்றிக்கொண்டு அரச சேவகன் வண்டியை ஓட்டிக்கொண்டு வருகின்றான். பள்ளியை

நோக்கி வண்டி கிடுகிடு என்று ஓடியது. குதிரை யிரண்டு வண்டியுடன் ஏரியில் விழுந்தது. குதிரை, வண்டியோட்டும் பாகன், மன்னவன் மகன் மூவரும் ஆழமான ஏரியில் விழுந்தார்கள். கரையில் வழி நடக்கும் செல்லப்பன் கண்டான். கருணை கொண்டான். தன் உயிரைத் துரும்பாக நினைத்து, ஏரியில் குதித்தான். முதலில் ராஜகுமாரனைக் கரையேற்றினான். பிறகு வண்டிக்காரனைக் கரையேற்றினான். ஒருவாறு குதிரையும் பிழைத்தது. இந்தப் பேராபத்திலிருந்து செல்லப்பன் காத்தருளினான். அரச குமாரனும் வண்டிக்காரனும் அரண்மனை போய் இந்த நிகழ்ச்சியைக் கூறினார்கள்.

மன்னவன் கேட்டு அதிசயம் அடைந்தான். உடனே ஓடி ஏரிக் கரையை யடைந்தான். செல்லப்பனைக் கண்டு கைகூப்பித் தொழுதான். அவன் அரசனைப் பார்த்து 'தெய்வ சகாயம்' என்றான்.

"செல்லப்பா! தெய்வம் உன் மூலம் என் அருமந்த மகனைக் காத்தது. செல்லப்பா! நீ நல்லப்பா! என் அரண்மனைக்குச் செல்லப்பா" என்று நன்றி யறிவுடன் கூறினான். அவனை அன்புடன் அரண்மனைக்கு அழைத்துப் போய், பலவகை உபசாரங்கள் புரிந்தான். இனி எங்கும் செல்லாதே? என் சொல்லுக்கு மறுப்புச் சொல்லாதே. இங்கேயே இரு" என்று கூறி அரண்மனையில் பரம சுகமாக வைத்து உணவும் உடையுந்தந்து உபசரித்து வந்தான். செல்லப்பன் அரசனுக்கும் அரசமா தேவிக்கும், அரச குமாரனுக்கும் கடவுளின் பெருமைகளையும், கடவுளின் கருணையின் அருமைகளையும் கூறிக் கொண்டு தெய்வ சகாயத்தால், தெய்வம்போல் சுகமே வாழ்ந்து வந்தான்.

மல்லப்பன் ராஜ சகாயம் என்று கூறிச் சென்றான். வழியில் ஒரு சத்திரத்தில் சோறுண்டு படுத்தான். கள்வர்கள் அவனிடம் இருந்து நாற்பது ரூபாயைக் கவர்ந்து சென்றார்கள். மல்லப்பன் கண்விழித்து எழுந்தான். காசு போனதை யறிந்து கவன்றான். கண் கலுழ்ந்தான். இனி என் செய்வது? எங்கு போவது? என் கதி அதோ கதியாயிற்றே? என்று வருந்தினான். பட்டினியால் வாடிப் பரதவித்தான். உடல் இளைத்தது. கால் தேய நடந்து செல்லப்பன் இருக்கும் நகரத்துக்கு வந்தான். அந்த நகரத்தின் நந்தவனத்தில் சோர்ந்து அமர்ந்தான்.

அந்த நந்தவனத்தில் ஒரு பூமரத்தின் கீழ் அரச குமாரன் கண் துஞ்சிக் கொண்டிருந்தான். அரசன் நெடுந்தொலைவில் உலாவிக் கொண்டு இருந்தான்.

அந்த மரத்தின்மீது ஒரு கருடன் ஒரு பாம்பைக் காலால் கொத்தித்தின்று கொண்டிருந்தது. பாம்பின் விஷம் அரசகுமாரன் கழுத்தின் மீது விழுந்தது. மல்லப்பன் ஓடி ராஜ சகாயம் என்று கூறி, தன் கையில் இருந்த சிறு கத்தியால் அந்த விஷத்தைச் சுரண்டி யெடுத்தான். கருடன் பாம்புடன் பறந்து போய்விட்டது. தொலைவில்

உலாவிக் கொண்டிருந்த அரசன் ஓடி வந்தான். மல்லப்பன் மன்னவன் மகன் கழுத்தில் கத்தியை வைத்துச் சுரண்டியதைப் பார்த்த அரசன் ஆலகாலம்போல் சீறினன். ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து மல்லப்பன் கையிலுள்ள கத்தியைப் பிடுங்கி எறிந்தான். அவன் கன்னத்தில் 'பளார் பளார்' என்று நான்கு அறைகள் தந்தான். ''சண்டாளா! கத்தியால் என் மகனைக் கொல்ல முயன்றனையா? ஆ! நீ மனிதனு? பாவீ! உனக்கு என்ன கேடு?'' என்று கூறிச் சீறி வைதான்.

மல்லப்பன் மன்னவன் மலரடிமீது விழுந்து வணங்கினன். 'மன்னவரே! ராஜ சகாயம். நான் தங்கள் புத்திரரைச் சத்தியமாகக் கொல்ல முயன்றேனில்லை. மரத்தின் மீது கருடன் பாம்பைக் கொத்தியது. பாம்பின் விஷம் தங்கள் மகன்மீது விழுந்தது. அதனைத்தான் கத்தியால் சுரண்டினேன். தாங்கள் என்னைப் பிழையாக நினைக்க வேண்டாம். ராஜ சகாயம்'' என்ருன்.

அவனுடைய சொல்லை அரசன் நம்பினனில்லை. உடனே மல்லப்பனைச் சிறையில் தள்ளினன். மல்லப்பன் சிறைப்பட்டுப் பெருந்துயர் உழந்தான்.

சில தினங்கட்குப் பிறகு சிறையில் உள்ள கைதிகட்கு அறவுரை பகரச் செல்லப்பன் சென்ருன். அங்குள்ள கைதிகட்குத் தெய்வ சகாயத்தின் திறத்தைக் கூறினன். அங்கே மல்லப்பனைக் கண்டான். அதிசயங் கொண்டான். ''ராஜ சகாயம் மல்லப்பா! நீ எப்படி இங்கு வந்தாய்?'' என்று கேட்டான்,

மல்லப்பன் செல்லப்பன் கால்மீது வீழ்ந்து அழுதான்; தொழுதான். நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறினன்.

செல்லப்பன் ''மல்லப்பா! இன்றிருந்து நாளை அழிகின்ற மனிதரைப் புகழ்ந்து ராஜ சகாயம் என்கின்றனையே! முடிசார்ந்த மன்னரும் முடிவில் பிடி சாம்பலாய் வெந்து மண்ணுவார்கள். என்றும் எங்கும் உள்ளது தெய்வம். இனியேனும், ராஜ சகாயம் என்ற சொல்லை மறந்து தெய்வ சகாயம் என்று கூறுவாய் தெய்வம்; சகாயம் புரியும்'' என்று உபதேசித்தான்.

நாற்பது நாட்கள் சென்றவுடன் மன்னனும் மந்திரியும் இந்த இருவரையும் தேடிக்கொண்டு வந்தார்கள். சிறையில் கிடந்து வாடும் ராஜ சகாயம் மல்லப்பனையும், அரண்மனையில் தெய்வம் போல் சிறப்புற்று வாழும் தெய்வ சகாயம் செல்லப்பனையும் கண்டார்கள். மல்லப்பன் அரசனைத் தொழுதான். அவன் வாக்கிலிருந்து தெய்வ சகாயம் என்ற சொல் வந்தது.

அரசன் அந்த அரசனைவேண்டி மல்லப்பனைச் சிறையிலிருந்து விடுவித்தான், பிறகு இருவரையும் அழைத்துக் கொண்டு தன் அரண்மனை சேர்ந்தான்.

# மகாபாரதம்

---

## சாந்தி பர்வம்

## மோக்ஷ தர்மம்

(மவர் 34—286ஆம் பக்கத் தொடர்ச்சி)

[கொலைக்குக் காரணமாதலால் யாகம் இழிந்தது என்பது பற்றி நாரதர் கூறிய உஞ்சவிருத்திப் பிராம்மணர் கதை]

தருமர் "பிதாமகரே! யாகம் தவம் இவைகளைப் பற்றி அறிய விரும்புகின்றேன்" என்றார். பீஷ்மர் "தரும! இதுபற்றி நாரதர் கூறிய வரலாற்றைக் கூறுகின்றேன் கேள்:

விதர்ப்ப தேயத்தில் தர்மோத்தரம் என்ற நகரில் உஞ்சவிருத்தி செய்யும் ஒரு பிராம்மண ரிஷியிருந்தார். அவர் யாகத்தைச் செய்ய முயன்றார். யாகத்தில் பசு, ஆடு இவைகளைக் கொல்லுவது பாவம் என்று கருதினர். சாமைதானியம், சூர்யபர்ணி, சுவர்ச்சலை என்ற கீரைகள் இவைகளைத் திரவியங்களாகக் கொண்டு யாகத்தைச் செய்தார். சருகுகளைத் தின்னும் ஒரு மிருகம் அங்கு அவருடைய அருகில் வசித்துக் கொண்டிருந்தது. அது அவரை நோக்கி, நீர் என்னை இந்த வேள்வியில் ஆகுதி செய்து சுவர்க்கத்தை யடைவீராக" என்று கூறியது. பிராம்மணர் "நான் உயிர்க் கொலை செய்யமாட்டேன்" என்றார். அந்த மிருகம் என்னைத் தடையின்றிக் கொல்லும். நானும் நற்கதி அடைவேன்; உனக்கு ஞானக்கண் கொடுத்திருக்கின்றேன். சுவர்க்கத்தில் உள்ள கந்தர்வ விமானங்களையும் அரம்பை மாதர்களையும் பாரும்" என்று கூறியது. அவர் அவைகளை நீண்ட நேரம் பார்த்தார். இம்சையால் வரும் இந்த சுவர்க்கம் எனக்கு வேண்டாம். நான் உயிர்க்கொலை புரியேன்" என்றார். பிறகு தருமதேவன் அவரிடம் அங்கு வந்து யாகம் செய்வித்தான். அவர் நற்கதி பெற்றார். கொல்லாமையே மேலான தருமம். கொலையுடன் கூடிய வேள்வி சுவர்க்கத்தை நல்கும். அது அருளாளர்க்கு அறமாகாது" என்றார்.

---

மல்லப்பன் அது முதல் தெய்வ சகாயம் என்ற திருமந்திரத்தைச் சொல்லத் தொடங்கினன்.

ஆகவே மகளே! எல்லாம் தெய்வச் செயலால் நடைபெறுகின்றது. தெய்வந்தான் துணை" என்று கூறி, அன்னம்மாள் தன் புதல்வி பொன்னம்மாளுக்குத் தெய்வ சகாயத்தை விளக்கி அறவுரை கூறினள்.

## பாவத்தை ஏன் செய்கின்றார்கள்?

பீஷ்மரைப் பார்த்துத் தருமநந்தனர், "பிதாமகரே! ஒருவன் பாவத்தை ஏன் செய்கின்றான்? எதனால் செய்கின்றான்? எதனால் அழிவை யடைகின்றான்? எதனால் முத்தியை யடைகின்றான்?" என்று வினவினார்.

பீஷ்மர் "பாரதனே! உனக்கு எல்லா அறங்களும் தெரியும். என் மீது நீ வைத்துள்ள மரியாதையால் கேட்கின்றாய். விவரமாகக் கூறுவேன். கவனமாகக் கேள்.

மனிதன் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்து வகையான சுகங்களை நுகரும்பொருட்டு ஆசை மேலிட்டு முயலுகின்றான். அதனால் இராகமும் துவேஷமும் விளைகின்றன. பல செயல்களைச் செய்கின்றான். மோகம் சோகம் முதலியன உண்டாகின்றன. விருப்பு வெறுப்புக்கு உள்ளாகின்றான். அறத்தில் அறிவு செல்லுவதில்லை. வஞ்சனையால் பொருளை யீட்டுகின்றான். தீமையை நினைக்கின்றான்; பொய் புகல்கின்றான்; தீமைகளைப் புரிகின்றான்; தீயவர்களுடன் நட்பு செய்கின்றான். இவன் இம்மையில் சுகம் அடைவதில்லை. மறுமையிலும் சுகம் பெறுவதில்லை. இப்படித்தான் மனிதன் பொறி புலன்களை அடக்கத் தெரியாது அவல நெறி சென்று பாவத்தைச் செய்கின்றான்.

இனித் தருமாத்மாவைப் பற்றிக் கூறுகின்றேன். உத்தமன் மனத்தை அதன் வழியில் செல்லவிடாமல் தடுத்து நிறுத்துகின்றான். பொறி புலன்களை அடக்கி ஆள்கின்றான். ஆன்றோர்க்குப் பணிவிடை புரிகின்றான். நல்ல ஆசாரத்துடன் இருக்கின்றான். அறவழியில் பொருளை யீட்டுகின்றான். பின்னர் நல்வினை தீவினைகளிலிருந்து ஒழிவு பெறுகின்றான். அதனால் முத்தியடைகின்றான்" என்றார்.

## மோட்ச உபாயங்கள்

யுதிஷ்டிரர் "பாரதரே! உபாயத்தால் ஒன்று கைகூடும். மோட்சத்திற்குரிய உபாயங்கள் எவை?" என்று கேட்டார்.

பீஷ்மர், "யுதிஷ்டிர! பொறுமையால் சினத்தைத் தொலைக்க வேண்டும். தியாகத்தால் ஆசையை அழிக்கவேண்டும். சத்துவ குணத்தால் தூக்கத்தை விலக்கவேண்டும். எச்சரிக்கையால் அச்சத்திலிருந்து விலகவேண்டும். தியானத்தால் ஆத்மாவைக் காக்கவேண்டும். ஐயந்திரிபு அறியாமைகளைச் சாதனத்தால் விலக்கவேண்டும். அறிவினால் காமக்ரோதங்களை விலக்கவேண்டும். நோய்களை, விரைவில் செமிக்கக் கூடிய உணவை அளவுடன் அருந்துவதால் அகற்ற வேண்டும். உலாவுவதால் சோம்பலை யகற்ற வேண்டும்' மௌனத்தால் அதிகம் பேசுவதை யகற்ற வேண்டும். புத்தியினால் மனத்தையும் வாக்கையும் அடக்க வேண்டும். யோகத்துக்கு இடையூறுகளான காமம் குரோதம்

லோபம் பயம் நித்திரை என்ற ஐந்தையும் விலக்கவேண்டும். தியானம், அத்தியயனம், தானம், சத்தியம், நாணம், கபடமில்லாமை, பொறுமை, தூய்மை, நல்லுணவு, பொறிபுலன்களின் அடக்கம் என்னும் யோக சாதனைப் பயிலுதல் வேண்டும். இவைகளால் ஒளி வளர்கின்றது. பாவம் தொலைகின்றது. இவனுடைய எண்ணம் முற்றுப் பெறுகின்றது. இதனால் முத்தி சித்திக்கின்றது'' என்றார்.

## ஜனகர் கூறியது

யுதிஷ்டிரர் ''அறிஞர் பெருமானே! ஆசைக்கு அடிமைகளான எங்களால், உடன்பிறந்தார்களும், புத்திரர்களும், மித்திரர்களும் சுற்றத்தாரும் கொல்லப்பட்டார்கள். அவாவினால் இப்பெரிய பாவத்தை நாங்கள் செய்தோம். ஆசையிலிருந்து விடுபடுவது எவ்வாறு?'' என்று கேட்டார்.

பீஷ்மர் ''விதேக அரசனாகிய ஜனகர் மாண்டவ்யருக்கு உபதேசித்த புனித உரையைக் கேள். ''மாண்டவ்யரே! நான் சுகமாக வாழ்கின்றேன். எனக்கு ஒன்றிலும் பற்றில்லை. ஆதலால் மிதிலாபுரி எரிந்தபோதும் நான் கவலைப்படவில்லை. என்னது என்று ஒன்றும் இல்லை. ஞானிகளுக்கு நிறைந்த பொருள்களும் துன்பத்தைத் தரும். அறிவீனர்களைக் குறைந்த பொருளும் மயக்குகின்றது. ஆசையற்றவர்களுக்கு உண்டாகும் இன்பம் மண்ணிலும் விண்ணிலும் கிடையாது. பசு வளர்கின்றபோது அதன் கொம்புந் தானே வளர்கின்றது போல், செல்வம் வளரவளர ஆசையும் கூடவே வளர்கின்றது. ஆசை வயப்பட்டவர்கள் சிறிது பொருள் செலவழிந்தாலும் பெரிய துயரத்தை யடைகின்றார்கள். பொருளில் பற்று வைக்கக் கூடாது. பற்று வைப்பதனால் துயரம் விளைகின்றது.

பொருளைப் பெற்றவன் அறஞ்செய்ய வேண்டும். அறிஞன் எல்லாவற்றையும் தானாகப் பார்க்க வேண்டும். விருப்பு வெறுப்பு சுகம் துக்கம் இரவு பகல் பயம் பயமின்மை இவைகளைத் தள்ளிவிட்டு சாந்தத்தை யடைவீராக. ஆசைதான் எல்லாத் துன்பங்களுக்கும் வித்து. ஆதலால் ஆசையான சங்கிலியை யறுத்து, இகபர சுகத்தைப் பெறுவீராக'' என்று கூறினார். இந்த வழியை நீங்களும் பின்பற்றுங்கள்'' என்று பீஷ்மர் கூறினார்.

தருமபுத்திரர் ''உத்தமரே! பிரம்மத்தை யடையும் சாதனங்கள் எவை'' என்று வினவினார்.

பீஷ்மர் ''இதுபற்றி ஹாரீதர் என்ற மகான் கூறுகின்றார் ''நிரம்பிய பொருள் இருந்தும் அவற்றைவிட்டு, வீட்டிலிருந்து புறப்பட்டுத் துறவை மேற்கொள்ள வேண்டும், பிட்சை யெடுக்காமல் தானே வலிதில் கிடைத்ததை சிறிது உண்ணவேண்டும். பிறரை நிந்திக்கக்

கூடாது. எந்த உயிருக்குந் தீங்கு செய்யக் கூடாது! ஓரிரவுக்குமேல் ஓரிடத்தில் தங்கக்கூடாது. பிறர் நிந்தித்தாலும் பொறுத்துக்கொள்ள வேண்டும். நிந்தித்தவனையும் வந்தித்தவனையும் ஒன்ருகக் கருத வேண்டும். உயிர் வாழ்வதற்கு மட்டுமே எளிய உணவை யுண்ண வேண்டும். கிடையாதபோது வருந்தக் கூடாது. தன்னை ஒருவன் புகழ்கின்றபோது மகிழாமல் வருந்தவேண்டும். பாழான வீட்டில் அல்லது வனத்தில், குகையில், ஒருவருக்குந் தெரியாமல் வசிக்க வேண்டும். பொறிபுலன்களை அவித்து அசைவற்ற மனத்துடன் இருக்கவேண்டும். உடம்பே மிகையென்று கருதவேண்டும். விழித் திருந்தும் குருடனுக வாழவேண்டும். இது முத்திக்குரிய சாதனம்'' என்று கூறினர்.

## விருத்திரனும் சுக்கிரரும்

யுதிஷ்டிரர் ''எல்லாம் அறிந்தவரே! எல்லோரும் எங்களைப் பாக் கியசாலிகள் என்று புகழ்கின்ருர்கள். ஆனல் எங்களைப் போல் துயர மடைகின்றவர்கள் உலகில் வேறு ஒருவனும் இருக்கமாட்டான். நாங்கள் தேவர்களால் மனித குலத்தில் பிறந்தோம். நாங்கள் எல்லா வற்றையும் விடுத்து சந்யாசத்தை எப்பொழுது அடைவோம்?'' என்று கேட்டார்.

பீஷ்மர் ' அரசனே! உங்கள் நினைவின்படி அது கைகூடும். நீங்கள் அனைத்தையுந் துறந்து முத்தி நலம் பெறுவீர்கள்.

முன்னெரு காலத்தில் விருத்திரனுக்கும் சுக்கிரருக்கும் நடந்த உரையாடலை உரைக்கின்றேன், கேள். தேவர்களால் வெல்லப்பட்ட வனும் அரசாங்கத்தை யிழந்தவனும், ஆற்றல் இழந்தவனுமான விருத்திராசுரன் ஒரு இடத்தில் சாந்தியாக இருந்தான்: அசுர குரு வாகிய சுக்கிரர் அங்கு வந்து அவனைப் பார்த்துக் கேட்கலானர், ''அப்பா வானவனே! பகைவர்களால் வெல்லப்பட்ட உனக்கு வருத்த மில்லையா?'' என்ருர். விருத்திராசுரன் ''குருவே! நான் சத்தியத் தாலும் தவத்தாலும் உலகத்தின் அழிவை யறிந்து வரவையும் போக் கையுங் குறித்து மகிழ்வதும் துக்கிப்பதுமில்லை. எல்லாம் காலத்தினுல் மாறுபாடு அடைகின்றன. உயிர்கள் காலத்துக்குக் கட்டுப்பட்டு பிறக் கின்றன; இறக்கின்றன. வினைக்குத் தக்க விளைவு வரும் என்று உணர்ந் திருக்கின்றேன். உயிர்கள் நல்வினை தீவினைகட்கு ஏற்ப தேவராயும் மனிதராயும் குறுக்குப் பிராணிகளாகவும் பிறக்கின்றன. அறிஞன் அறிவு வலிமையால் துயரமடைய மாட்டான். நான் முன்னெரு காலத்தில் கடுந்தவம் புரிந்து மூவுலகங்களையும் வசப்படுத்தி யாட்சி செய்தேன். யாராலும் வெல்ல முடியாத வலிமையுடன் வாழ்ந்தேன். இப்போது கன்மபலத்தால் நழுவிவிட்டன. அதனுல் நான் துயர மடையவில்லை. முன் நான் இந்திரனுடன் போர் புரிந்தபோது, பரம

பத நாயகனுன நாராயணரைத் தரிசித்தேன். அந்த பகவானைப் பற்றி அறிய விரும்புகின்றேன். நீர் எனக்கு விவரமாக விளம்பும்" என்று கேட்டான். அதே சமயத்தில் சநத்குமார மகாமுனிவர் அங்கு வந்தார். இருவரும் அவரை வந்தனை வழிபாடு செய்தார்கள். உயர்ந்த ஆசனத்தில் அமரச் செய்தார்கள். சுக்கிரர் "முனிசிகாமணியே! இந்த அசுர வேந்தனுக்கு அரிமுகுந்தருடைய பெருமையைக் கூறும்" என்ருர். சநத்குமாரர் விஷ்ணு மகிமையைக் கூறலாஞர்.

(தொடரும்)

---

*அழகு மணக்குங் குளிர்வதனம் அன்பு மணக்கும் விழிநளினம்
அருநான் மறையின் பொருளிதழில் அரும்ப மணக்கும் புன்முறுவல்
புழுகு மணக்குந் திருநீறு பொலிய மிளிரும் கத்தூரிப்
பொட்டு மணக்கும் நுதலோங்கும் புகழே மணக்கும் புயமதனைத்
தழுவி மணக்குங் கடம்புவரந் தந்து மணக்குங் கரம்வென்றி
தழைத்து மணக்கும் வேலருளே ததும்பி மணக்குந் தருணசரண்,
முழுது மணக்குந் திருமேனி முருகா! முத்தந் தருகவே!
முத்தி மணக்குந் தென்தணிகை முதல்வா! முத்தந் தருகவே!

*வானெலாம் பொன்னுக நீலஅலை மாணிக்க வயலெனச் சுடர்தெறிப்ப
வந்தெழுஞ் செஞ்சுடர்ப் பரிதிபலசதகோடி மருவிவளர் செஞ்சோதியாய்க்
கானுலாம் மரகதக லாபச்சிகண்டியிற் கைபுனைந் தியற்றெணுத
கண்கொளாக் கவின்பெறு வனப்பினிற் சிவமணங் கமழவந் தருள் குழகனே!
தேனுலாம் பதுமவய லாவினன் குடிபழநி செந்திலம் பதியேரகம்
தென்பரங் குன்றுபல குன்றுபழ முதிர்சோலை செய்ப்பதி விராலி கதிரை
மானுலாம் வள்ளிமலை வேளூரி டைக்கழியின் மருவுசெவ் வேள்வருகவே!
வண்டமிழ் நிலைத்தபுகழ் கொண்டுயர் திருத்தணிகை வளர்ஞான வேள் வருகவே!

---

* திருத்தணிகை முருகன் பிள்ளைத் தமிழ், ஆசிரியர் திரு, ஈ. வே. வேங்கடசுப்பிரமணியம், 15, தணிகாசலம் பிள்ளைத் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. விலை ரூ. 1-50.

உ

முருகா

# கதிர்காமம்

---

திரு. கி. வா. ஜகந்நாத ஐயர் அவர்கள்

மாணிக்கவாசகர், "கண்டும் கண்டிலேன் என்ன கண் மாயமே!" என்று பாடினுர், இலங்கைக்குப் போகிறவர்கள் அப்படிச் சொல்வதற்கு ஓர் இடம் இருக்கிறது. இலங்கையின் இயற்கை அழகைக் கண்டு களிக்கப் போகிறவர்கள் அங்குள்ள நானில வகைகளையும் கண்டு இன்புறலாம். மலையும் மலைச்சாரலும் அருவிகளும் காடுகளும் கடற்கரையும் பிற காட்சிகளும் அவர்களுடைய கண்ணுக்கும் கருத்துக்கும் இன்பத்தைத் தரும். இலங்கை வாழும் மக்களையும் தொழிலாளர்களையும் அவர்களுடைய உழைப்பினுல் உயர்ந்து நிற்கும் ரப்பர்த் தோட்டங்களையும் பரந்து கிடக்கும் தேயிலைத் தோட்டங்களையும் தொழிற்சாலைகளையும் கண்டு களிக்கலாம். அழகான ரோடுகள், அற்புதமான விகாரைகள் ஆகியவற்றைக் காணலாம். பழைய சிற்பங்களையும் ஓவியங்களையும் கண்டு கண்டு அவற்றின் அழகைக் கண்ணுல் மொண்டு மொண்டு உண்ணலாம்.

சிவபக்தர்கள் கண்டு களிக்க வேண்டிய சிவாலயங்கள் இலங்கையில் உண்டு. திருக்கேதீசுவரம், திருக்கோணமலை, நகுலேசுவரம் முதலிய தலங்களுக்குச் செல்லலாம். கண்ணகிக்குக் கோயில் கட்டி வழிபடும் வழக்கத்தைக் கண்டு பெருமிதம் அடையலாம்.

ஆனுல், இலங்கையின் அதிசயங்களில் ஒன்ருகிய கதிர்காமத்துக்குச்செல்கிறவர்கள் கோயிலை காணலாம்; தீர்த்தத்தைக் காணலாம்; மூர்த்தியைக் காண முடியாது. "கதிர்காமத்தைக் கண்டேன். ஆனுல் காணவில்லை" என்றே சொல்ல வேண்டி வரும். மர்மரகசியம், மூடு மந்திரம், விளங்காத புதிர், விடைகாண முடியாத பிரச்னை என்று உள்ள வார்த்தைகளை யெல்லாம் தொகுத்து அடுக்கிச் சொல்லுங்கள். அத்தனைக்கும் உறைவிடம் கதிர்காமம்!

நானும் கதிர்காமம் போனேன். பல சமயங்களில், தலயாத்திரை செய்கிறவர்களுக்குக் கோயில் முழுவதையும் பார்க்க முடிகிறதில்லை. சுவாமியையே தரிசிக்க முடியாமற் போகிறது. திருவிழாக் காலங்களில் ஆயிரக் கணக்கான மக்கள் கூடி முட்டி மோதிக்கொண்டு தங்கள் பக்தியைக் காட்டிக் கொள்ளும் இடங்களில் மனிதர்களையே நன்ருகப் பார்க்கலாம்; கடவுளைப் பார்ப்பது அருமை. எப்படியாவது கோயிலுக்குள் நுழைந்துவிட்டாலோ சாம்பிராணிப் புகையின் இடை

யிலும் கற்பூரப் புகையின் இடையிலும் இறைவனுடைய திருவுரு வத்தை எளிதிலே கண்டுவிட முடியாது. எந்தத் தலத்தையாவது நன்றாக தரிசிக்க வேண்டுமானல் உற்சவ காலங்களில் போகவே கூடாது. அப்போது நின்று நிதானமாக எல்லாவற்றையும் பார்ப் பதற்கு இயலாது. உற்சவம் இல்லாத காலங்களில் போனல் ஊரையும் பார்க்கலாம்; ஆலயத்தையும்.பார்க்கலாம்; மூர்த்திகளின் தரிசனமும் நன்றாகக் கிடைக்கும். குருக்களையாவும் நம்மோடு ஆறுதலாகப் பேசி விஷயத்தை விளக்குவார். இதை அன்பர்கள் அநுபவத்தில் உணர் வார்கள்.

நான் கதிர்காமம் போன சமயத்தில் எந்தவிதமான உற்சவமும் இல்லை. உண்மையைச் சொல்லப்போனல் நாங்கள் போன அப்போது கோயிலில் நாலைந்து பேர்களே இருந்தார்கள். மணிக் கணக்காக இருந்து பார்த்துக்கொண்டு வருவதற்கு ஏற்ற அமைதியும் தனிமை யும் இருந்தன. நிதானமாகவே எல்லாவற்றையும் பார்த்தேன். ஆனல் "கண்டும் கண்டிலேன் என்ன கண் மாயமே" என்றுதான் இப்போது சொல்கிறேன்.

அசோக வனப் பகுதிகளைப் பார்த்துக் கொண்டு இரவு முன ராகந்த என்ற இடத்தில் நானும் கணேஷும் நண்பர் நாகலிங்கமும் தங்கினேம். முனராகந்த என்ற தொடருக்கு மயிற்குன்றம் என்பது பொருள். இதை நான் விசாரித்து அறிந்தபோது ஒருவகையான மகிழ்ச்சி உண்டாயிற்று. பெயர்ப் பொருத்தத்தை ஆராய்ந்தபோது தான் அந்த மகிழ்ச்சி எழுந்தது. மறுநாள் வெள்ளிக்கிழமை காலையிலே புறப்பட்டுக் கதிர்காமம் செல்வதாக இருந்தோம். மயில் வாகனப் பெருமானைத் தரிசிக்கப் போகுமுன் மயிற்குன்றத்தில் தங்கியதிலே ஒரு பொருத்தம் இருக்கிறதா, இல்லையா, சொல்லுங்கள். மயிலுக்கும் முருகனுக்கும் உள்ள பொருத்தத்தை மாத்திரம் நினைந்து நான் களிக்கவில்லை. அதற்கு மேலும் ஒரு செய்தி என் நினைவிலே எழுந்தது.

கதிர்காமத்துக்கு ஒருமுறை புகழேந்திப் புலவர் போயிருந்தார். அப்போது ஆலயத்தின் ஒரு பகுதியிலே ஒரு மயில் நின்றிருந்தது. அது பாம்பொன்றைத் தன் அலகிலே கவ்விக்கொண்டிருந்நது. அந்தப் பாம்பை அது குத்திக் கிழித்துக் குலைத்துவிடும் என்பது உறுதி. புகழேந்திப் புலவர் இதைக் கண்டார், "ஐயோ பாவம்! இந்தப் பாம்புக்கு இன்றுடன் ஆயுள் முடிந்ததுபோலும்!" என்று எண்ணி இரங்கினர். இதை விடுவிக்க ஏதாவது வழி உண்டா என்று யோசித் தார். மந்திரம் செய்து மயிலை மயக்கிப் பாம்பை விட்டுவிடும்படி செய்யலாம். அப்படி மந்திரம் செய்யும் வகை புலவருக்குத் தெரியாது. ஆயினும் அவரிடம் மாய மந்திர சக்தியுடைய வேறு ஒரு வித்தை இருந்தது. ஆம்; கவிதை பாடும் ஆற்றல் அவரிடம் இருந்தது. 'மயிலைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்வதாக ஒரு பாட்டைப் பாடலாம்.

மயிலும் முருகனும் விட்ட வழி எதுவானாலும் சரி' என்ற எண்ணத்தோடு ஒரு வெண்பாவைச் சொல்லத் தொடங்கினர்.

பாட்டு, முருகனிடம் காதல் பூண்ட பெண் ஒருத்தி பாடுவதாக அமைந்தது. 'தீயர்களுடைய கூட்டத்தைச் சீறும் வடிவேற் பெருமாளும் தென் கதிர்காமப் பெருமாளுமாகிய முருகன் எழுந்தருளும் வாகனமாகிய மயிற் பெருமாளே!' என்று மயிலை விளிக்கிருள் காதலி. 'நான் முருகனைப் பிரிந்து வாடுகின்றேன். என்னைப் பெற்று வளர்த்துப் பேணும் தாய்மார்கள் என்னைப் படுத்தும் பாடு சொல்லிமுடியாது. அவர்கள் என்னைக் கண்டு ஐயப்படும்படியாக அவர்கள் கண்முன்னே என் உடலம் நிலைகுலையும் வண்ணம் சந்திரனும் செய்கிறது; என் விரகத்தை மிகுதிப்படுத்துகிறது. அதை யாராவது விழுங்கிவிட்டால் எனக்குப் பெரிய அல்லல் நீங்கிவிடும். மயிற் பெருமாளே! தயை செய்து உன் வாயிலே இருக்கும் பாம்பை விட்டுவிடேன். அதுபோய் உதயமாகும் அந்தச் சந்திரனை அப்படியே விழுங்கிடட்டும். இந்த உபகாரத்தைச் செய்யமாட்டாயா?' என்று மனம் கரைந்து வேண்டுகிருள்;

"தாயர்அவை முன்வருத்தும் சந்த்ரோ தயந்தனக்குஉன்
வாய்அரவை விட்டுவிட மாட்டாயோ?—தீயர்அவை
சீறும் அயிற்பெருமாள் தென்கதிர்கா மப்பெருமாள்
ஏறும் மயிற்பெருமா ளே."

*[தாயர் அவை - தாய்மார் கூட்டம். தீயர் அவை - தீயவர்களாகிய அசுரர்களின் கூட்டம். அயில் - வேல். மயிலையே மயிற் பெருமாளே என்று மரியாதையாக விளித்தாள்.]*

புகழேந்தி பெண்ணாகிவிட்டார். பாட்டு எழுந்தது. என்ன காரணமோ, மயிலும் சாந்தம் அடைந்தது. அரவை விட்டுவிட்டது.

இந்த வரலாறும் பாட்டும் முனராகந்தாவில் நினைவுக்கு வந்தன. முருகனுக்கும் மயிலுக்கும் உள்ள பொருத்தம் யாரும் அறிந்தது. கதிர்காமத்துக்கும் மயிலுக்கும் உள்ள தொடர்பு தமிழ்ப் பாட்டிலே பதிவாகி யிருப்பதை இந்தக் கவியைப் படித்தவர்களே உணர்ந்திருப்பார்கள்.

வெள்ளிக்கிழமை விடியற்காலையில் முனராகந்தாவை விட்டுப் புறப்பட்டோம். மலைவழியே கார் கீழே இறங்கியது. பிறகு சமவெளியில் அடர்ந்த காட்டினூடே செல்லத் தொடங்கியது. எங்கள் கார் 50, 60, 70, 80 என்று வேகமாகப் பறந்தது. ஆனாலும் கதிர்காம வேலனைத் தரிசிக்க வேண்டும் என்று எங்களுக்கு இருந்த மனோவேகத்தோடு அதனால் போட்டிபோட முடியவில்லை.

கதிர்காமத்துக்குப் போகும் வழியில் திஸமாரா என்ற இடம் இருக்கிறது. அது பெரிய ஊர். கதிர்காமத்துக்கும் அதற்கும் பதினேரு மைல் தூரம். கதிர்காமத்துக்குப் பல திக்குகளிலிருந்தும் வரலாம். பெரும்பாலும் கொழும்பிலிருந்து புறப்பட்டு மாத்தளே என்ற ஊரின் வழியே வருபவர்களே மிகுதி. எப்படி வந்தாலும் திஸமாராவுக்கு வந்துதான் போகவேண்டும். கதிர்காமம் உள்ள அருள்மய நாட்டுக்குத் தோரண வாயில் திஸமாரா என்றே சொல்ல வேண்டும். திஸமாரா வரையில் நல்ல தார் ரோடு இருக்கிறது. அதன் பிறகு சாதாரணமான சாலேதான். முன் காலத்தில் காட்டுப் பாதைதான் இருந்ததாம். யாத்திரிகர்கள் இந்தப் பதினேரு மைலேயும் நடந்தே கடந்தார்களாம். இப்போதுள்ள பாதையில் கார் நன்ருகச் செல்லும். உற்சவ காலங்களில் ஆயிரக் கணக்கான மக்கள் இந்தச் சாலேயில் செல்வார்களாம். அதனுல் எல்லாக் கார்களேயும் திஸமாரா விலே நிறுத்திவிடுவார்களாம்.

திஸமாரா என்பது திஸ்ஸ மகாராமம் என்பதன் சிதைவு. திஸ்ஸன் என்ற அரசன் கட்டிய மகா ஆராமம் (பெரிய கோயில்) அந்த ஊரில் இருக்கிறது. ஊருக்கு நெடுந்தூரத்திலேயே அந்தப் பௌத்தக் கோயிலின் ஸ்தூபி கண்ணுக்குத் தெரியும். அவ்வளவு உயரமானது அது. திஸமாரா வரையில் பல வகையாக வரும் வழிகள் அங்கிருந்து ஒன்றுபடுகின்றன. வெவ்வேறு துறையில் புகுந்து வெவ் வேறு இன்ப துன்ப அநுபவங்களே உடையவர்கள் இறைவனுடைய பக்தியிலே ஈடுபட்டு அவனே அணுகும்போது எல்லோரும் ஒரே நெறியில் ஒரே அநுபவச் சாலேயில் செல்கிருர்கள் அல்லவா? அதனே இந்தச் சாலே நினேப்பூட்டியது.

திஸமாராவிலிருந்து புறப்படும் கதிர்காமச் சாலேயே பக்தி மணக்கும். யார் போனுலும் இரு மருங்கும் உள்ள மக்கள் 'அரோகரா' என்று கூவுகிருர்கள். எத்தனேயோ நூற்ருண்டுகளாகப் பக்தர்கள் கதிர்காமவேலனேத் தரிசித்து வருகிருர்கள். இலங்கையில் வாழ்பவர் கள் மாத்திரம் அல்ல; இந்தியாவிலிருந்து தோணிகளிலும் மரக்கலங் களிலும் பக்தர்கள் ஆர்வத்தோடு வந்து பழங்காலத்தில் தரிசித் தார்கள். பிறகு கப்பலில் வந்தார்கள். எப்படி வந்தாலும் கடைசியில் பல மைல் தூரம் கால் நடையாகவே வந்தார்கள். ஒருவர் இருவராக வராமல் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். காட்டுப் பிரதேச மாகை யால் வன விலங்குகளுக்கு அஞ்சியே கூட்டமாக வந்தார்கள்.

தமிழ் நாட்டில் கதிர்காமத்துக்குப் போய் வந்தவர்கள் சொல்லும் கதைகளேக் காட்டிலும் போகாதவர்கள் சொல்லும் கதைகள் அதிகம். 'இருநூறு மைல்களுக்கு மேல் ஒரே காட்டு வழி. பக்தியில்லாதவர் களுக்கு நடக்கவே முடியாது. வழியில் காட்டு மிருகங்கள் வரும்.

யானை கூட்டம் கூட்டமாக வரும். அரோகரா என்று பக்தியோடு சொன்னால் வழிவிட்டுவிடும்' என்று சொல்லிப் பயமுறுத்துவார்கள். இதைக் கேட்ட புலவர் ஒருவர்,

"காணிற் குமாரவே லா என்னும் அன்பரைக்
கரடிபுலி யானை சிங்கம்
காலிற்பணிந்தஞ்சி ஓடவும்"

என்று பாடியிருக்கிறார்.

இவ்வாறு அச்சமூட்டினாலும் அன்பர்கள் கதிர்காமவேலனைத் தரிசிக்க வருவதை நிறுத்தவில்லை. பல இடையூறுகளுக்கு நடுவில் ஒரு காரியத்தைச் சாதிப்பதில் அதிக மதிப்பும் பயனும் அநுபவமும் இருக்கின்றன. ஆயிரக் கணக்கான மக்கள் இங்கே வந்து கொண்டு தான் இருந்தார்கள். "அரோகரா! அரோகரா!" என்று முழக்கம் செய்து கொண்டே இந்தக்காட்டு வழியில் நடந்து சென்றார்கள். அந்த ஒலியைக் கேட்டுக் கேட்டு அங்கே வாழும் மக்களும் "அரோகரா!" என்று எதிரொலித்தார்கள். கதிர்காமத்துக்கு யார் போனாலும் 'அரோகரா' என்ற முழக்கத்தை எழுப்பினார்கள். இந்தப் பழக்கத்தால், போகிறவன் சொன்னாலும் சொல்லாவிட்டாலும் அங்கே இருக்கிறவர்கள் சொல்வதை நிறுத்துவதில்லை. அங்குள்ள மரமும் மண்ணும் கல்லும் கரடுங் கூடத்தான் 'அரோகரா'ச் சத்தத்தை எதிரொலிக்கும். அதைக் கேட்க நமக்குக் காதில்லை; அதுதான் வேறுபாடு.

திஸமாராவிலுள்ள டகோபா கதிர்காம வேலன் திருக்கோயிலுக்கு வழிகாட்டும் அடையாளத் தம்பமாக நிற்கிறது; பல திசைகளிலிருந்தும் வரும் மக்களுக்குக் கதிர்காமம் அருகில் இருக்கிறது என்ற நம்பிக்கையை ஊட்டும் கலங்கரை விளக்கமாக நிலவுகிறது. திஸமாராவில் ஒரு பெரிய ஏரியும், அதன் கரையில் வருவார் தங்குவதற்கும் உணவு கொள்வதற்கும் உரிய விடுதி ஒன்றும் உள்ளன. அங்கே கிடைக்கும் உணவு எப்படி இருந்தாலும் சட்டி நிறையத் தரும் தயிர் மிக மிகச் சுவையுள்ளது.

திஸமாராவை விட்டுப் புறப்பட்டோம். கதிர்காமக் கோயிலைப் பற்றி நான் சில புத்தகங்களை வாசித்திருக்கின்றேன். அன்பர்கள் கற்பனையைக் கலந்து கூறும் செய்திகளையும் கேட்டிருக்கிறேன். எல்லாம் சேர்ந்து விளங்காத ஒரு மயக்கத்தை உண்டாக்கி இருந்தன. "பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் கோயிற்கூரையை வேய்வார்கள். அப்போது அதைப் பிரிப்பவன் இறந்துவிடுவான் என்பது ஒரு கதை. உள்ளே இன்னது இருக்கிறது என்பது யாருக்கும் தெரியாது. உள்ளேயிருந்து ஒரு தட்டு வரும். அதில் தேங்காய் பழம் வைத்தால் மறுபடியும் உள்ளே போகும். சிறிது நேரம் கழித்து உடைத்த தேங்காய் மூடிகளும் பழமும் வரும். அவை அப்படி வருவ

தற்குக் காரணம் யாருக்கும் தெரியாது.''—இது ஒரு கற்பனே. ''சிங்க ளவர்களே இங்கே பூசை செய்கிருர்கள். பன்னிரண்டு வருடங்களே ஒருவன் பூசை செய்வான். அப்புறம் அவன் இறந்துவிடுவான். அவ னுக்குப் பதிலாக மற்ருெருவன் வருவான்.''—இது ஒரு கட்டுக்கதை.

இத்தனையிலும் நான் பொதுவான உண்மை ஒன்றை உணர்ந் தேன். 'கதிர்காமக் கோயிலில் ஏதோ மூடுமந்திரம் ஒன்று இருக்கிறது. அது யாருக்கும் விளங்கவில்லை. விளங்காத ரகசியத்தைப் பற்றிப் பல பல வதந்திகளைப் பரப்புவது மனித இயல்பு. இந்த வதந்தி களுக்குக் காரணம் கதிர்காமக் கோயில் சம்பந்தமான இரகசியம் ஏதோ ஒன்று இருப்பதுதான்' என்று எண்ணினேன். அந்த இரகசி யத்தை நான் நேரிலே போய் ஆராய்ந்தும், விசாரித்தும். ஊகித்தும், துப்பறிந்தும் சிறிதளவு கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஆசை இருந்தது. கதிர்காமத் தல தரிசனத்தில் இயற்கையாக இருந்த வேகம், இரகசியத்தைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஆர்வம் ஆகிய இரண்டும் சேர்ந்துகொண்டன.

கதிர்காமத்துக்கு வந்துவிட்டோம். கோயில் தெரியவில்லை. ஊரும் தெரியவில்லை. மாணிக்க கங்கை என்ற ஆற்றின் கரையை வந்து அடைந்தோம். அங்கே பக்தர்களுக்குத் தேங்காய் பழம் விற்கும் கடை ஒன்று இருந்தது. மாணிக்கக் கங்கையின் அக்கரை தான் கதிர்காமம் என்ருர்கள்.

இரு மருங்கும் மிக உயர்ந்த மருதமரங்கள் அடர்ந்து ஓங்கி நிற்கச் சலசல வென்று மாணிக்க கங்கை என்ற சிற்ருறு ஓடிக் கொண்டிருக்கிறது. இலங்கையின் எல்லா ஆறுகளையும் கங்கை யென்றே சொல்கிருர்கள். ஆறு குறுகியதுதான்; ஐம்பதடி அகலம் இருக்கும். ஆற்றங்கரையில் உள்ள கடைக்கு அருகில் காரை நிறுத்தி விட்டு மாணிக்க கங்கையில் நீராடப் புகுந்தோம். நாங்கள் அங்கே சென்றபோது பகல் பதினேரு மணி இருக்கலாம். வெயில் வேளை யாகையால் ஆற்று நீரில் ஆடியது சுகமாக இருந்தது. நன்ருக நீராடிய பிறகு தேங்காய் பழம் முதலியவற்றை வாங்கிக் கொண்டோம். காரை ஆற்றிலே இறக்கி ஓட்டி அக்கரை ஏறிக் கோயில் வாசலிலேயே கொண்டு போய் நிறுத்தலாம் என்று அங்குள்ளவர்கள் சொன்ஞர் கள், நாங்கள் அவ்வாறு செய்யவில்லை. காரைக் கரைக்கருகிலே நிறுத்திவிட்டுப் புறப்பட்டோம். நூற்றுக் கணக்கான மைல் காலால் நடந்து பல துன்பங்களையும் பொறுத்துக் கொண்டு கதிர்காம தரிச னத்துக்கு வரும் அன்பர்கள் இருக்கும்போது, நாங்கள் சிறிது தூர மாவது நடக்கவேண்டாமா?

மாணிக்க கங்கையில் சில சமயம் வெள்ளம் வருமாம். அப்போது ஆற்றில் இறங்கிச் செல்ல முடியாது. அதனுல் ஆற்றைக் கடக்க

ஆடும் பாலம் ஒன்றை அமைத்திருக்கிறார்கள். அதன் வழியே சென்று அக்கரையை அடைந்தோம். இக்கரை கடந்து அக்கரைக்கு வந்தவுடன் நாங்கள் நிற்கும் இடம் சந்நிதி வீதி என்று அறிந்து கொண்டேன். வானைமுட்டும் கோபுரமும் பெரிய பெரிய குளமும் உள்ள தமிழ் நாட்டுத் தலங்களைப் போன்ற இடங்கள் எங்கும் இல்லை. மாணிக்க கங்கையில் நீராடும் போது கதிர்காம ஆலயம் இன்னும் நெடுந் தூரத்தில் இருக்கும் என்று நினைத்தேன். ஆலயமென்று இருந்தால் அதன் கொடிமரமோ கோபுரமோ பூசையின் ஒலியோ நெடுந்தூரத் துக்கு அப்பால் வருபவர்களுக்கு ஆலயம் இருப்பதைப் புலப்படுத்தும் அல்லவா? அத்தகைய அறிகுறி ஏதும் இங்கே இல்லை.

சந்நிதி வீதி தென் வடலாக இருக்கிறது. வடக்குக் கோடியில் கதிர்காம வேலன் திருக்கோயில், தெற்குக் கோடியில் வள்ளியம்மை யின் ஆலயம். கதிர்காமம் மக்கள் வாழும் ஊர் அன்று. முருகன் திருக் கோயிலுக்காகவே அமைந்த சிறிய ஊர். அங்கே நிரந்தரமாக வாழ்ப வர்கள் யாரும் இல்லை. யாத்திரிகர்களுக்கு வேண்டிய பண்டங்களை விற்று வியாபாரம் செய்யும் சில கடைகள் இருக்கின்றன. உற்சவ காலங்களில் பக்தர்கள் தங்குவதற்குப் பல மடங்களும் சத்திரங்களும் இருக்கின்றன.

சந்நிதி வீதிதான் பெரிய வீதி. வேறு ஒன்றிரண்டு சிறிய தெருக் கள் இருக்கின்றன. உற்சவ காலத்தில்தான் இங்கே மனித நட மாட்டம் இருக்கும். காட்டாற்றில் வெள்ளம் வருவது போல அக் காலத்தில் மனித வெள்ளம் கரை கடந்து வருமாம். ஆளுக்கொரு கற்பூரச் சட்டியைத் தலையில் வைத்துக்கொண்டு வருவார்களாம். கோயிலுக்கு உள்ளும் புறமும் இந்தக் கற்பூரத் தீபமே இரவில் இருளை ஓட்டிவிடுமாம்.

ஆலயத்தை நோக்கிச் சென்றோம். ஆலயத்தின் முகப்பில் ஒரு வளைவு இருக்கிறது. சில காலத்துக்கு முன் அமைத்ததாக இருக்க வேண்டும். உள்ளே புகுந்தோம். சிறிது தூரம் திறந்தவெளி இருக் கிறது. அப்பால் திருக்கோயில் இருக்கிறது.

(தொடரும்)

## எமது வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. 6-00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | ரூ. 3-00 |
| 3. | திருப்புகழ்த் திரட்டு | ரூ. 1-00 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற் படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) | அச்சில் |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | அச்சில் |
| 6 | திருப்புகழ் விரிவுரை—மூன்ருவது தொகுதி (மூன்ருவது படைவீடு—பழநி) | ரூ. 5-00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலை) | ரூ. 2-50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி குன்றுதோருடல் முதற்பாகம் | ரூ. 5-00 |
| 9. | திருப்புகழ் விரிவுரை—ஆரும் தொகுதி (குன்றுதோருடல் இரண்டாவது பகுதியும். பழமுதிர் சோலையும்) | ரூ. 5-00 |
| 10. | மகாபாரதம், வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரரார் பாடல்களுடன் கூடியது | ரூ. 5-00 |
| 11. | கந்தரநுபூதி (உரையுடன்) | ரூ. 2-00 |
| 12. | அறிவுரையமுது (கட்டுரைகள்) | ரூ. 0-50 |
| 13, | திருவாசகத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 14. | செந்தமிழ் இன்பம் ( ,, ) | ரூ. 0-50 |
| 15. | சிந்தனைத்தேன் ( ,, ) | ரூ. 0-50 |
| 16. | மணிமொழிகள் | ரூ. 0-50 |
| 17. | அநசூயை (வரலாறுகள்) | ரூ. 1-00 |

---